உ

திருச்சிற்றம்பலம்.



திருக்கைலாயபரம்பரை

வேதாகமசித்தாந்த சைவசமயாசாரியபீடமாய் விளங்காநின்ற

திருவாவடுதுறை ஆதீனத்து

மகாசந்நிதானமாகிய

# ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர்

# நான்மணிமாலை.

இஃது

தில்லையம்பூர்ச்

சந்திரசேகரகவிராஜபண்டிதரவர்களால்

இயற்றப்பட்டு

மேற்படி பண்டிதரவர்கள்

குமாரராகிய

தி. சிவகுருநாதமுதலியாரவர்களால்

சென்னைத்

தண்டையார்பேட்டை

இலக்ஷ்மீவிலாஸ அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ஈஸ்வர வருஷ வைகாசி மீ.

திருச்சிற்றம்பலம்.

# துறைசைச் சுப்பிரமணியதேசிகர்

# நான்மணிமாலை.





## காப்பு.

நேரிசைவெண்பா.

திருககோட்டி வாழ்துறைசைத் தேசிகனு மெங்கள்
திருக்கோட்டினு சுபரமண்ய தேவன்—மருககழற்கு
நான்மணிப்பொன் மாலைசொல நல்ல பதமருளும்
நான்மணிக்கைக் குஞ்சரநற் றாள்.

நேரிசைவெண்பா.

தேன்மருவு கொன்றைச் சிவபெருமான் பொற்கமலத்
தேன்மருவு நற்றுறைசை சேர்ந்துதி—வான்புவியில்
மன்மாக்க ளுக்குயர்ந்த மாவீ டளிப்பனெஞ்சே
மன்மாக்க ளுண்மலர்தாள் வாழ்த்து. (௧)

கட்டளைக்கலித்துறை.

வாழத்தும் வடிவந் திருககல்வி செல்வமிம் மண்ணினல்கும்
ஆழ்த்து மறுமையிற பேரின்ப வெள்ளத் தறமகடையை
வீழ்த்து மலைகட லிற்பெரி தாக விரிபிறப்பைத்
தாழ்ததுந் துறைசைத் தயாசிந்து நாதன்பொற றாண்மலரே. (௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தாளாலேயுதைத்தவற்குந்தலையிந்
தனமேற்றுத்தண்பாணற்கும்
வாளாரவெஞ்சிலையுடனேகொடுஞ்சிலையைப்
புரத்தெறியும்வன்மையோற்கும்
மீளாததலையளித்தீர்வெள்ளேற்றீர்
புள்ளேற்றோனிரந்துவேண்டத்
தாளாகிலும்முதவியாளாது
துறைசையுற்றீர்தயையிற்சிந்தே. (௩)

## நிலைமண்டிலவாசிரியப்பா.

சிந்தினைவிந்தமாஞ் சிலையையுமடக்கிய
சிந்தியன்முனிவனுக் கருளினை திருவருள்
அந்திவான்பிறையையு மப்பிறைம்தாடுவனை
அந்திவானமலைநல் லாளையுமணந்தனை
உந்தியைத்தந்தியி னுரியினைமுகிலினை
உந்திபூத்தோன்முடி யொளிபெறத்தாங்கினை
தந்தியினிசைவல தாபதனுக்கும்மொன்
தந்தியூர்சதமகன் றனக்குமன்றருளினை
நந்திக்காரினி நாயகவுனையலால்
நந்திக்கார்வய னறுமதுவருக்கைமா
குந்தியார்பொழில்வயின் மந்தியைங்கனிகொடு
குந்தியார்ந்திடுவளங் குலவியதுறைசையில்
வந்தியார்க்குந்திரு மன்பெரும்பதியினை
வந்தியார்க்குந்தரு வானுளங்கொண்டனை
இந்தியப்பகைதெறூஉ மியன்முனிவரருள
இந்தீவரத்திற் கிமகரனையினை
புந்தியனைய புலன்மிகுபுலவரின்
புந்திக்கெட்டாப் புநிதனீயாதலின்
நந்தியவறிவுடை நாயினேன்றனக்கும்மெலன்
நந்திநாயகர்க்கரு ணற்பதமுதவுவாய்.

## நேரிசைவெண்பா.

உதவிற் பதமலரை யொப்பறுமால் போதன்
பதவிக் கரும்பதியென் பாலாம்—மதமார்
பெரும்பகட்டோன் வேதனரி பேணுவர்சீற் றங்கொள்
கரும்பகட்டோன் கண்டுவணங் கும். (௫)

## கட்டளைக்கலித்துறை.

வணங்கா முடியரும் வந்து வணங்கிடு பாதர்வண்கார்
வணங்கா முடிமதி தோய்துறை சைக்கிறை வந்தனுகா
வணங்கா முடியி லகப்பட் டுழலு மெனக்கன்னையோ
வணங்கா முடிக்கு மறலியென் றேகினை யாயிழையே. (௬)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆயிழைபங்கிடையன்னைப்பெடைமானை
யாறணியங்கணற்குத்தெவ்வன்
சேயிழைமாப்பழியாதிசிசீமுக்த்தா
ணிறந்திசைதயச்செய்தானங்கோ
ஆயிழைநீறுறைசையில்வாழருமறைக்கு
மறையானவனைகன்றன்பாற்
போயிழைகற்றெறுடைவாங்கிப்போதுவா
யோறுயிவட்பராக்கத்தாளே. (எ)

## நிலைமண்டிலவாசிரியப்பா.

புரந்தரன்மாலயன் போதருநியோர்
வரந்தருவாயென மலரடிபரவிட
வேதபுருடனும் பாதுகையாகியே
பொன்னடியதனைத் தன்முடிமேற்கொள
பணிமுனிபுலிமுனி பதமலர்பழிச்சிட
மணிமுடிவானவர் மாதவர்வணங்கிட
மணியொளிபாற்சுவை மலர்மணமென்னவும்
அணிபுனல்குளிரெனத் தனையகலாதே
ஒன்றியவளைமகள் கண்டுவப்பெய்த
மன்றினடம்புரி யெண்டோட்பண்ணவன்
கயிலையென்னுஞ் சயிலந்தனையொரீஇ
இப்புவிசெய்த நற்பெருந்தவத்தாற்
சுப்பிரமண்ணியத் திப்பியப்பெயர்கொடு
அப்பிரமெனவைந் தக்கரவமுதைப்
பவமெனுங்கோடை பாறிடச்சொரிந்தே
சிவமெனும்பயிர்செழீஇச் சிறக்கச்செய்தனன்
அவனடிகாணின் னமனடிகாணீர்
அவன்படிமிதிக்கின் னமன்படிமிதிக்கீர்
அவன்புரங்காணின் னும்புரங்காணீர்
அவன்முகங்காணின் சிவன்முகங்காண்பீர்
நல்லவருக்கு மல்லவருக்கும்
இல்லையென்னச் சொல்லவறியான்

போந்தவர்க்கருள்பவன் பொற்பதியாதெனின்
ஆய்ந்தவளமலி யகன்புனனாட்டினில்
காவிரிகூலமார் காவிரித்தென்சார்
ஓவறுபல்வள மோங்கியசோலையும்
வண்டார்துளபமும் வனசமுமுவணமும்
அண்டர்தருவு மன்னமுமானும்
சிந்தாமணியு நந்தாநிதியும்
ஆரும்போந்துஞ் சீர்பெறுநிம்பமும்
தொண்டையுங்கெண்டையுந் துரோணமும்வேங்கையும்
அத்தியுமாவு முத்தமவரசம்
அரம்பைக்கூட்டமும் வரம்பிலநிறையும்
ஆண்டுநீர்சென்றிடின் வேண்டினபெறுவீர்
அப்பதிகோமுத் திப்பதியென்ப. (அ)

நேரிசைவெண்பா.

என்பணியும் வன்பணியு மேற்ற மணிப்பணியும்
என்பணியுங் கொண்ட விறையவனே—மின்பொருந்தும்
மாசடையா காசமுறு மன்னு பொழிற்றுறைசைக்
காசடையா காசடையா வாறு. (௯)

கட்டளைக்கலித்துறை.

ஆறணி வேணியர் தென்றுறை சைப்பதி யாளரெங்கள்
நீறணி மேனி நிமலரைச் சேர்த்தில னோர்ந்தசந்தச்
சேறெனத் தீயைக் குழைத்துத் தனத்தினிற் றீட்டுமன்னே
வேறினி யென்செயத் தான்றுணியாள்சொலு மெல்லியரோ. ()

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மெல்லிநல்லாட்கோர்பால்வெள்விடைக்கோர்பால்வெம்
விறன்மறலிக்கோர்கான்மற்றரைப்பாம்பிற்கும்
கொல்லுசிறுகாற்புலிக்குமறுகால்கோதில்
குலமுனிவன்றனக்குமுக்கால்கோடீரத்தின்
வல்லரவுவாழ்சிரத்தைவரநதிக்கும்
வழங்கினீர்பிள்ளைமதியுடையீருமை
நல்லவர்கண்மதியுடையநம்பவொன்பர்
நாயினேனுண்மதியினதையொன்பேன். (௧௧)

நிலைமண்டிலவாசிரியப்பா.

நாதவுருக்கொரு நாயகமாசிலா
நாதவிப்பூதல நண்ணவெண்ணுபு
சீதமதிக்கலை நீத்தனையொப்பறு
போதமதிக்கலை பூண்டனைதீதுசெய்
வன்பணிநீர்த்தனை நன்பணியேற்றனை
மின்பணிதிருத்தினை யென்பணிதிருத்தினை
மாதவர்க்கருளினை போதமெற்கருளினை
நடமிடுபெரியிவர் வடதிசைவாழுமோர்
சக்கிலித்தோழமை தக்கதன்றெனவுறுப்
பக்குவவுளதினர் தொக்கவீற்றிருந்தனை
சூலியென்றிடுபெயர் நீலியைத்துறந்தனை
புல்லாடைநீக்கினை கல்லாடைவீக்கினை
அக்கணியொருவினை யக்கணிமருவினை
கயிலைதுறந்தனை துறைசையுறைந்தனை
அன்புடையடியர்மே லன்பையுமளவறு
ஓகையுமீகையு மோட்டமறந்தனை
ஆதலினடியேற் கருமறையறிவரு
பாதமளித்தருள் பாலிப்பாயே. (கஉ)

நேரிசைவெண்பா.

பாலாழி யைப்புலியின் பாலனுண வன்றளித்தென்
பாலா ழியவினையின் பற்றறுத்தாய்—தோலாது
சங்கெடுத்தாற் குத்திகிரி தானளித்துத் தானவர்ச்
சங்கெடுத்தாண் டாய்துறைசை சார்ந்து. (கங)

வெறிவிலக்கல்

கட்டளைக்கலித்துறை.

சார்ந்து துறைசைப் பதியுறை நாயகன் றண்மலரைத்
தேர்ந்து கொடுவென் னுதலினிற் றீட்டில டையவன்னை
ஓர்ந்து பழிவா லுன்னுது பாலக்கண் டாங்கியைக்கொண்
டார்ந்து மயறெற வெண்ணியவெண்ணமிக் கேழைமைத்தே. ()

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏழையருக்கிருநிதியுமிமையவருக்
கீரமுதுமியையத்தந்தாய
கூழையாயினுமெனக்குக்கொடுத்தளிக்கக்
கூடாதோகோனைத்தாவும்
தாழைமதுத்தண்டுநிறைமாத்துறைசை
காத்திறைசெய்தவக்குன்றேவன்
கூழைபுரியையவர்தமைமாற்றியடி
யாருளத்திற்குடிகொள்வோனே. (கரு)

### நேரிசையாசிரியப்பா.

ஓராழிவெய்யவ னொளிசெயுமுலகினில்
சீரார்துறைசைச் செழும்பதியுறைவோய்
ஐந்தனுவுற்றிடு மங்கமொன்றிரண்டும்
உந்துமுறவி யொழிகடமொன்பதும்
மூன்றுபூதமு மும்மூனாறுருவும்
வென்றவோர்கூத்தனு மீராறுபூட்சியும்
ஓர்சேதனமுறு மொருபதுமூர்த்தமும்
சீர்மூன்றுவியார் சிறந்தவாறுறுப்பும்
பன்னொருபடிவமூர் பகருமோருயிரும
சொன்னவீரொன்பான் றேமறுதேயமும்
பொன்பெறுநிறமுடைப்புநித
நின்பெயர்புகன்றிடுவிமலதேசிகனே. (கசு)

### நேரிசைவெண்பா.

தேசிகனே தேசின் கொழுந்தே சிவபுரனே
ஆசிலாத் தென்றுறைசை யண்ணலே—மாசிலா
நற்பதத்தை நீதரினே நாடேனென் வற்புரத்தை
நற்பதத்தை நானடைவே னன்கு. (கஎ)

### வெறிவிலக்கல

### கட்டளைக்கலித்துறை.

நின்செய லாகக் கருதுநல் வீரிந்த நானிலத்தில்
வன்செய லந்தக ளாத்துணி கொண்டு வருத்தலென்னைப்

பொன்செய லாக்கிய பாசத்தைப் போக்கிடும் பூங்கடுக்கை
மன்செய லாந்துறை சைப்பதி நாயகன் மாலையொன்றே. (க௫)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மாலையளித்தாரெனக்குமலரைந்துங்
கணைவில்லுமதப்பயற்குக்
காலையளித்தேர்நாரிகடன்முரசு
மதிக்குடையோர்கங்குன்மாநற்
சேலையளித்தார்கொடியார்வன்கண்ணை
னொன்கண்ணார்சிவசிவாதங்
காலையளித்தாரோற்றுறைசைமின்னே
வழக்கிடுவேன்கருதுவாயே. (கசு)

நிலைமண்டிலவாசிரியப்பா.

கருவிளங்கூவிளங் கண்டுகருப்புவில்
பொருவிழிகொங்கைசொல் பூருவென்னவும்
நடையிடைதொடைநுத னறுங்களமுகஞ்செவி
பிடிதுடிகதலிவெண் பிறைவளைமரைவளை
பல்லிதழ்நாசிவாய் பண்டிதோளுந்திவெண்
வின்மணிதுவர்திலம் வீழியால்வேய்மகிழ்
என்னநாரியர்தமை யேத்துமென்னேழைமை
தன்னைநீக்கிநற் றுளளித்தாண்டவன்
பிறப்பையுங்கரப்பையு மறப்பையுமொறுத்திட
அறப்பொருளாதிய சிறப்புடனுறச்செய
வான்கலைப்பொருளையும் வான்றலைப்பொருளையும்
வானிலத்தமுதையு நானிலத்தமுதையும்
வேண்டினர்க்கருளிட வீண்டியேதுறைசையில்
போந்ததேசிகருந்திருமணியினைக்
காணுங்கண்ணே யொளிபெறுகண்ணும்
காணாக்கண்ணூ னீர்பொழிபுண்ணும்
அவன்புகழ்கேட்டிடுஞ் செவிபுலன்கொளுஞ்செவி
அவன்புகழ்கேட்டிடாச் செவிபுலியுறுசெவி
அவன்றாள்வணங்குந் தலையேவண்டலை
அவன்றாள்வணங்காத் தலையேவெண்டலை

அவன்பணிபுரியுங் கையேமலர்க்கை
அவன்பணிபுரியாக் கையேபுலக்கை
அவனைத்துதிக்கு நாவேசெந்நா
அவனைத்துதிக்கா நாவேபுன்னா
அவனைவலங்கொளுந் தாளேநற்றாள்
அவனைவலங்கொளாத் தாளேபுற்றாள்
அவன்பணிக்குதவும் பொருளேயறப்பொருள்
அவன்பணிக்குதவாப் பொருளேமறப்பொருள்
அவன்பெயருன்னு மனமேநன்மனம்
அவன்பெயருன்னா மனமேகன்மனம்
ஆரணமாமென வநேகசாகைகளால்
காரணன்பெருமையைக் கழறிடுமதனால்
பாணிக்காமற் பனிமலர்கொடுதூஉய்த்
தாண்மலர்துதித்துத் தனிப்பதம்பெறுகத்
தொண்டரோயின்றே கண்டுய்வீரே. (௨௰)

நேரிசைவெண்பா.

உய்ய வுலக முயர்தந்தைப் பேரொரீஇத்
துய்யமகன் பேர்கொளீஇச் சோதிமிகு—வய்யகத்தில்
வண்டுறைசை மேவியே மாந்தர்க் கருள்புரிவான்
வண்டுறைசெஞ் சேவடியே மன்னு (௨௧)

கட்டளைக்கலித்துறை.

மன்னித் துறைசை மருவிய நாதன் மலரடியை
உன்னித் துயிலைத் துகிலைத் தொடியை யொருவியென்றன்
கன்னித் துடியிடை யாள்படும் பாட்டினைக் கண்டிலரே
பொன்னித் துறைபடி யுங்குரு கீர்சொலும் போயவர்க்கே ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அவர்புகன்றநன்மொழியாமரியெச்சில்
கொடுதேம்பியறிஞர்மேன்மைத்
தவர்புகழுந்துறைசையிறைதாண்மருவு
மெனைவளையத்தவறிலாத
எவர்புகுந்துகூறிடினுமெட்டுணையு
மிசையாதவிருப்புநெஞ்சர்

இவர்புரிந்தசெயலனைத்துமிப்புவிதப்
பறவுணரவியம்புவேனே (உ௬)

நிலைமண்டிலவாசிரியப்பா.

இயம்பருநான்மறை நயம்பெறவொலித்திட
வயம்பெறுமிருமுனி வரருளமகிழ்ந்திட
மதிநதியாடிட வானவர்பாடிட
நதிபதியொலிகெடத் துதியொலிமிகைபட
நந்திமுழவமு நான்முகன்கஞ்சமும்
கந்திருவரரிசை முந்துறுநாரதர்
தும்புருமாடக மன்புடன்கைக்கொடு
உம்பர்கடம்மனம் பம்பரமாடிட
இசைத்திடுமின்றெலி திசைப்புலமன்னிட
முயலகன்மிசைவல மிலகியதாணிறீஇக்
கதிர்முனைந்தாமரை மதிமுனைந்செயலென
வாமத்தாளுள மகிழ்தலைசிறந்திட
வாமத்தாளினை வானிற்றூக்கித்
தோமென்றுடிடச் சுவணச்சபையையும்
மாமதிமரபினில் வருராஜகேசரன்
மனப்படுபுழுக்கந் தனைத்தெறவிடத்தாள்
தனைக்குறண்மிசைநிறீஇச் சாம்பூநதச்சபை
தனக்குக்காண்மாற் றதிகமெனும்படி
தேனமர்கூடலின் மீனவன்காண
வலத்தாடேக்கித் தோமென்றுடிட
நலத்தகுவெண்பொன் னாகியசபையையும்
கொண்டுதண்டுறைசையிற் குலவியநாயக
தொண்டனுளத்தின் றுருசினையகற்றி
இருப்புச்சபையா விருப்புற்றுறைகவே. (உ௭)

நேரிசைவெண்பா.

உறையோங்கு தென்றுறைசை யுற்றேனெனக்கோ
உறையோங்கு நற்பொருளு மோங்கும்—சிறையோங்கு
கால்புரங்கா ணுதொழிவேன் கந்தன் கயிற்புரியும்
நால்புரங்காணு தொழிவேன் மற்று. (உ௮)

கட்டளைக்கலித்துறை

மற்றென் பொருட்டு வார்மலர்த் தாளின் மறலிதனைச்
செற்றென் பரிபவ நீக்குதலின்றிச் சிறுமதியர்
நற்றென் றுறைசைப் பதியுறை நாயகர் நாகவிறை
பற்றென் பணிபணி மான்மழு நீத்த படிவத்தரோ. (௨.௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

படிவம்பல்செய்தவர்க்கும்பனிமலரைப்
பெய்தவர்க்கும்பண்பார்மக்கட்
படிவங்கொண்டருடுறைசைப்பதிக்கரசை
நதிக்கரசைப்பணியவிந்தப்
படிவம்மின்னிருமறைபன்முறைதெரிய
வவனடியைப்பரவச்சொன்ன
படிவம்பார்மலர்தூவிப்பழிச்சிடுமின்
னொழிச்சிடுமின்பவப்பவ்வத்தை. (௨.௭)

நிலைமண்டிலவாசிரியப்பா.

பவ்வம்படப்பை பருநகர்மலைகான்
எவ்வியினுள்ள வின்பமார்பொருள்களும்
ஒன்றிய துறைசை யென்றுரைபதியுள்
துறவரசாகிய புரையறுமணியினை
எந்நிலத்தவரு நன்னிதியென்றும்
அருட்கடலென்றும் விருப்புடனுரைப்பர்
பவக்கடறனக்குத் தவக்குறுமுனியும்
மிடியெனும்வரையிற் கடுதிறலிடியும்
ஆலயத்திருட்கு மாலையாமொளியும்
பசிக்கனறனக்குச் சுசிப்புனலாயும்
அவிச்சைவிடத்திற் காரமுதாயும்
கேடெனும்பழுவக் கோடரியாயும்
காமக்கரிக்குத் தாமரியாயும்
உரமார்பாசக் கரவாளமாயும்
அகிபிசிதனக்குக் ககபதியாயும்
பொருமைக்கடிக்கு நறுநிம்பமாயும்

சினமெனுமரிக்குக் களைவன்சிம்புளும்
ஆகத்தோன்றி வாகைகொண்டிடுதலின்
எப்பொருடைமையு மெய்ப்பயனடக்கா
ஏதுவினாலே யேனையோர்போல
எல்லவருக்கும் நல்லவனென்ன
இல்லதுபுகலே னிங்கிலத்தோர்க்கே. (௧௮)

நேரிசைவெண்பா.

தோலுடையன் மால்விடையன் றூயன் றுறைசையுளன்
தோலுடைய னென்றார் சுகம்பெறுவர்—தோலுடையக்
கூடவிலம் பாவெய்தான் கோல மலர்ப்பதத்தைக்
கூடவிலம் பாவெய்தான் கூத்து. (௨௯)

மொழிவிலக்கல்

கட்டளைக்கலித்துறை.

கூத்த னுலகுய்ய மன்றிற் குனித்துத் துறைசையுற
ஆத்த னடிமலர் சூட்டிடத் திரு மணங்குக்கொரு
கூத்தனைக் கொன்று விரும்பிய வன்னை குறித்தல்கொலோ
பூத்தலல் லாமற் பொருளொன்று மில்லைநற் பூவையரோ. (௯0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பூவரசுசெய்யவுநான்வேண்டிலேன்விண்
புவியரசுசெய்யமனம்பொருந்திலேனாங்
காவரசுமாவரசுகமலனென்றுங்
கருதுபதமலர்துதிக்கக்கண்ணினேற்கு
நாவரசுபாவளித்துப்பாலித்தாண்டு
நற்கருணைபுரிந்தருள்கநறுந்தேன்பில்கி
மாவரசுநிறைதுறைசைக்கரசேநாவின்
மன்னமுதேயின்னமுதேமணியேபாகே. (௯.௧)

நிலைமண்டிலவாசிரியப்பா.

பாகப்பாவையைப் பண்ணுறமூவர்சொல்
பாகப்பாவுமென் பாவுமணந்தனை
அரிக்கணைபரித்தனை யரிக்கணைதரித்தனை
அரிக்கணைவிரித்தென தகப்பகையொழித்திலை

திருக்கின்மலர்க்கணைத் தெவ்வனையெரித்தனை
திருக்கினைமுருக்கியென் சிந்தைநோய்செறுத்திலை
அடிமலரளித்தகண் ணற்கருளுதவினை
அடிமலரளித்தென தலமரலகற்றிலை
வந்தனைமாநில மகிழ்வுறத் துறைசையில்
வந்தனைகொண்டெனுண் மன்னிவதிந்திலை
முக்கரணங்களு மகிழ்வுறமுனதருள்
முக்கரணஞ்செய்து முயங்கிடப்பெற்றிலேன்
ஆண்டவன்வழிவழி யாளாமைகொண்டடியனை
ஆண்டவமாக்குத லுடைகளுக்கழகல
கண்டவன்காற்றிற் கருணைசெய்யாவிடின்
கண்டவனொன்றனைக் கணக்கிடுவார்களோ
எத்திக்கும்புக ழுறைவதிகையிடன்
எத்திக்குமிலா வேழையெவ்வாறுய்வேன்
பருத்தியல்பவப்பிணி யொன்றும்வன்பகைப்
பருத்திக்கெட மாகியபகத்தோய்
நடுவனையடிமிகு தடிவெனக்குறியோ
நடுவறுநுணர்த்திய நலனிலான்மொழியினை
அறங்கடைக்குகாரண மாக்கவெண்ணியோ
அறங்கிடவுறையு ளாக்கினைந்தோ
ஐயநெஞ்சின னுமெனவுன்னியோ
ஐயம்பின்னடிக் கடிமையென்றோர்ந்தோ
ஈந்திலைபோல வென்றுமுன்றிருவருள்
ஈந்திலைபோலு மிணையடியுதவிலேன்
போந்திடுகென்னப் புகலினும்புலரோன்
போந்தவர்க்கருளும் புநிதநீயாதலின்
உன்னடிகாணின் மன்னுமென்மும்மலம்
உன்னுமொழிமுன மிருளெனவிரியுமே. (கஉ)

நேரிசைவெண்பா.

இரியும் பவப்புணரி யீர்ந்துறைசை மன்னு
நரியைப் பரியாக்கு நாதா—அரிபிரமர்
என்றுதொழு முன்னடியை யேழையடி யேற்கும்
இன்றுதரிற் றாழா தினி. (கங)

## கட்டளைக் கலித்துறை.

இனிக்குஞ் சுவைத்துறைசைக் கரசேபொன் னெழிற்சபையில்
குனிக்குஞ் சிவபர நின்போகனக குலமலரொன்
செனிக்குஞ் சிறப்புறின் றென்றிசைக்கோ மகன்போதவன்னத்
தனிக்குந்சரமத்திலன்றேனு மென்றனைச்சார்கிலனே. (௧௪)

## அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சாரானெவன்மறலிசார்ந்துலகமணி
புதுககோள்சண்டன்விண்டின
சீரானபலந்தருசைவருக்கிரரறநா
லாமெட்டுச்சிறந்தமெய்யில்
ஏரானவீறுமுதலயனிக்கி
பேணமெயிலுவ்விவ்வவ்வும்
நேராகவவ்விவ்வவ்
வடனிரீடுநெறியுடனேநினைந்திட்டார்க்கே. (௧௫)

## நிலைமண்டிலவாசிரியப்பா.

கோளாதவர்க்குநீண் மீளாக்கதியருள்
கோளகியபா கிளர்கயிலையையொரீஇ
ஆனிடநீத்துநன் மானிடமேற்றனை
மடத்தினைக்கருக்கமின் மடத்தினிலிருந்தனை
தோலாடைபோக்கிமென் றூலாடைவீக்கினை
இடத்தாளைநீக்கிமா வலத்தாளைத்தூக்கினை
இடத்தாளென்முடிவையா திருந்தனைபோலுநீ
நாதமுன்னெழுத்தையும் போதமாற்றியதையும்
ஓதுமன்றாதி யெண்ணுருக்கரந்திட்டதும்
நின்பெயருருப்புகள ன்புடன்றெரித்தன
நீதருமோகியா றதவுணர்ந்தனன்
வல்லுருமூன்றையு மெல்லுருமூன்றையும்
புல்லுமிடையுருப் பொருந்துமிரண்டையும்
கொண்டவிலச்சினை மண்டலமறியா
வல்லுருபுவிகனல் வான்மணிமூன்றும்
மெல்லுருகால்வெளி விளங்கியமானும்

இடையுருமதிபுண லெனவிரண்டாகும்
முடியுலகுடையநீ யிடைவுலகடைந்தனை
மெய்ப்படுபுலவர் விளம்புமாயிரத்துள்
நெய்ப்படுநியாய நீகொளற்குறித்தே
முறைதெரியகவநான் மறைபுகழ்துறைசையில்
உறைதருசிவபர வோர்மொழிகேண்மோ
அருத்திகொண்டிட வைந்துலோகத்தையும்
அருத்தஞ்செயுமுன் னடியாம்பரிச
வேதிசேர்ந்த வினையினோடுகிய
ஓதுலோகத்தை யொளிர்மாழையாக்கா
துற்றிடுமாயிற் குற்ற மியார்மாட்டதோ
உன்னைத்தடுப்பவ ருலகினிலிலையே. (௫௬

நேரிசைவெண்பா.

இலையணையன் போதணைய னீரிருகோட் டும்பன்
மலையணைய வூர்வோன் மலர்தூஉய்—நிலையணைந்தார்
அன்மனக்கா வார்துறைசை யண்ண றுதியாத
வன்மனக்கா வாறே வட. (௫௭

கட்டளைக்கலித்துறை.

வடத்தை யணிகரன் வந்தனை செய்குவன் வந்தெனைப்பூ
இடத்தையன் மாலரி யேத்தி மலர்கொடு வெம்பவத்தைக்
கடத்தைய வென்றுபன் னூனூந் தொழுந்துறை சைக்கரசன்
இடத்தையணித்தவன் பொற்கழ லென்ற னிதயத்ததே. (௫௮)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இதையச்செறுத்தன்னிலின்பநீர்தேக்கியே
யேதமறுசிவதீக்கையாம்
இதைகொண்டுதொளிசெய்துநன்மொழியெருத்தூவி
யெழிலுற்றபஞ்சாக்கர
விதையிட்டுகாமாதிகளைகட்டுசைவம்
விளைத்துத்துறைசைப்பதிசெயும்
இதையெட்டுவிழிவேதன்முதலொட்டவிமையோர்க
ளிமையோனாமறவார்களே. (௫௯)

### நிலைமண்டிலவாசிரியப்பா.

மறவேன்கனவிலு மலரடிப்போதினை
நறவார்கொன்றையு நதிமதிமிலச்சினை
அழலுருவேற்றனை பழமலைகாத்தனை
ஆடலுவந்தனை கூடல்புகுந்தனை
பூபாலனாயினை கோபாலனாயினை
நாயகமாயினை தாயகமாயினை
கயிலைச்சயிலமார் கண்ணுதலொருவ
கயிலைக்கனியெனக் கண்ணுறமறைப்பொருள்
தெரித்திடப்பரமதேசிகமூர்த்தமாத்
தரித்தனைதுறைசையிற் றவர்க்கருடந்தனை
அடியேன்மலக்கனலவிந்திடவதித்தனை
முடியினிற்றிருவடி முனிவறச்சூட்டினை
சேயனாத்திரிந்துழ றீயனைச்சீரடிச்
சேயனாக்கொண்டனை திருவுளமகிழ்ந்தே
மருவாவென்றனை மார்ச்சாலநியாயமாய்
மருவார்கழற்றுணை மகிழ்ந்தளித்தாண்டனை
மூவர்புகழ்ந்திடு முதுமொழிகொண்டநீ
பாவலர்போலியேன் பாவையுங்கைக்கொள்வாய்
அம்பலவாணனடி மலர்வாழ்க
செம்பொற்சிகரச் சினகரம்வாழ்க
சுப்பிரமண்ணிய தூயதேசிகனடி
செப்பிடுமென்முடி வாழ்கசிறந்தே. (௪0)

துறைசைச் சுப்பிரமண்ணியதேசிகர்

நான்மணிமாலை

முற்றுப்பெற்றது.